உ

மரகதவிநாயகர் துணை.

# பிள்ளையார் நோன்பு

## மான்மியவசனம்.

அகத்தியமாமுனிவரருளிச்செய்த

ஆசிரியப்பாவுக்கிணங்க

வசனரூபமாயெழுதுவித்து,

தேவிகோட்டை

செக. ராம. அ.

இராமநாதச்செட்டியாரவர்கள்

குமாரராகிய

வயிரவச்செட்டியாரால்

ஷை யூர்

திருநாவுக்கரசுநாயனார் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விளம்பி-௵ மார்கழி-௴

# இதில் அடங்கிய விஷயங்கள்.



சிவமயம்.

# முகவுரை.

பரமசிவனுக்கு முதற்குமாரரான விநாயகக்கடவுள் கற்பங்கள் பலவாதலின், அவ்வக்கற்பங்கடோறும் ஆன்மாக்கட்கு அருள்செய்தற் பொருட்டுக் கொண்டருளிய திவ்விய திருவவதாரங்கள் பலவற்றுள் ஒன்றனை எடுத்தோதிப், பின் அக்கடவுளின் விரதங்களிலொன்றாய், எளிதிற்பயனளிப்பதாய் உள்ள சஷ்டிவிரதம் இப்படிப்பட்டதென்றும், அதனை இப்படி அனுட்டித்தல்வேண்டுமென்றும், அதனை அநுட்டித்தார் இன்னாரின்னாரென்றும், அதனாற்பெறும்பயன் இன்ன இன்ன என்றும், அதனை அநுட்டித்து இடையில் அலட்சியம் செய்து விடுத்தோரின் கேடு இன்னதென்றும், இந்நூல் சொல்லும்.

இந்தச்சஷ்டிவிரதம் முக்கியமென்பதனை விநாயகபுராணமும் கூறுகின்றது. அன்றியும், யாழ்ப்பாணத்தைச்சார்ந்த நல்லூர் ஸ்ரீலஸ்ரீ **ஆறுமுகநாவலர்** அவர்கள் செய்திருக்கும் சைவவினாவிடை இரண்டாம்புத்தகத்தின் விரதவியலில் விநாயகவிரதங்கள் சுக்கிரவாரவிரதம், விநாயகசதுர்த்திவிரதம், விநாயகசஷ்டிவிரதம் என மூன்று என்றும், அவற்றுள் விநாயகசஷ்டிவிரதமாவது கார்த்திகைமாசத்துக் கிருஷ்ணபக்ஷப்பிரதமை முதல் மார்கழி மாசத்துச் சுக்கிலபக்ஷ சஷ்டியீறாகிய இருபத்தொருநாளும் விநாயகக்கடவுளைக் குறித்து அநுட்டிக்கும் விரதமாமென்றும், இதில் இருபத்தோரிழையாலாகிய காப்பை ஆடவர்கள் வலக்கையிலும் பெண்கள் இடக்கையிலுங்கட்டிக்கொண்டு முதலிருபதுநாளும் ஒவ்வொரு பொழுது போசனஞ்செய்து இறுதிநாளாகிய சஷ்டியில் உபவாசஞ்செய்தல் வேண்டுமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

விநாயகக்கடவுளுக்கு மகோற்சவங்கொண்டாடுகிறவர்கள் இந்த விநாயகசஷ்டி உற்சவம் ஏற்படுத்திக்கொண்டாடின், அதனால் மேன்மையான நற்பயனை அடைவர். வேதாரணியத்தில் இவ்விநாயகசஷ்டி மகோற்சவம் நடைபெற்றுவருகிறது. இந்நோன்பு யாழ்ப்பாணத்திலும் பெரும்பான்மையோரால் அநுட்டிக்கப்பட்டுவருகிறது. அன்றியும், இந்நோன்பு தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் ஆதிகாலந்தொடங்கிப் பரம்பரையாய் அநுட்டிக்கப்பட்டுவருகிறது. சந்திரகுலோற்பவர்களாகிய இந்நாட்டுக்கோட்டை நகரத்தார் தாங்கள் பூர்வத்தில் நாகநாட்டிலிருக்கும்பொழுதே மரகதவிநாயகர் பூஜாநியமதுரந்தரராய் ஒழுகியமையின், இவ்விநாயகசஷ்டிநோன்பை அநுட்டித்தல் இவர்களுக்கு உரிமையுடைத்தென்க. சுபம்.

முகவுரை முற்றிற்று.



சிவமயம்.

உமாதேவியார் செய்தருளிய

# முப்பத்திரண்டு தருமங்கள்.

1. ஆதுலர்க்குச்சாலை - தரித்திரர்கள் தங்கியிருத்தற்கு இடமும், ஏழைகள் இல்வாழ்க்கைக்குக் கிரகமுமமைத்தல்.
2. ஓதுவார்க்கு உணவு - பள்ளியிற்கற்கும் அநாதக் குழந்தைகளுக்கு அன்னமிடுதல்.
3. அறுசமயத்தோர்க்கு உண்டி - ஆறுசமயத்தார்க்கும் உணவுகொடுத்தல்.
4. பசுவிற்கு வாயுறை - பசுவிற்குப் புல்முதலியவை பிடுங்கிக்கைத் தீன்கொடுத்தல்.
5. சிறைச்சோறு - காவலிலகப்பட்டவர்களுக் கன்னங்கொடுத்தல்.
6. ஐயம் - தரித்திரர்களுக்குப் பிச்சையிடுதல்.
7. இன்பண்ட நல்கல் - பலகாரவகைகளை வறிய குழந்தைகள் முதலானவர்களுக்குக்கொடுத்தல்.
8. அறவைச்சோறு - சிறு குழந்தைகள், விருத்தர், கூன், குருடு, முடம்முதலிய வேலைசெய்து சீவிக்க இயலாத அநாதர்களுக்குச் சத்திர முதலியவை வைத்து அன்னங் கொடுத்தல்.
9. மகப்பெறுவித்தல் - அநாதர்களாயுள்ள கர்ப்பிணிகளுடையபிள்ளைப்பேற்றினிமித்தம் மருத்துவச்சாலைகள் ஏற்படுத்திப் பிரசவிக்கச்செய்தல்.
10. மகவுவளர்த்தல் - தாய் தந்தை முதலியவர்களில்லாத திக்கற்ற குழந்தைகளை வளர்த்தல்.
11. மகப்பால் வார்த்தல் - குழந்தைகளுக்குப் பால்கொடுத்தல்.
12. அறவைப்பிணஞ்சுடுதல் - அநாதப்பிரேதத்துக்கு ஈமக்கடன் செய்தல்.
13. அறவைத்தூரியம் - அநாதருக்குப்புடவைவஸ்திரங்கொடுத்தல்.
14. சுண்ணம்பு - சுண்ணம்புகொடுத்தல்.
15. நோய்மருந்து - வைத்தியசாலை ஏற்படுத்தி நோய்க்கு மருந்து கொடுத்தல்.
16. வண்ணார் - தரித்திரர்களுக்கு வஸ்திரம் வெளுத்துக் கொடுப்பித்தல்.
17. நாவிதர் - தரித்திரர்களுக்கு க்ஷௌரஞ்செய்வித்தல்.
18. கண்ணாடி - சுமங்கலிகளுக்குக் கண்ணாடிகொடுத்தல்.
19. காதோலை - சுமங்கலிகளுக்குக் காதோலைகொடுத்தல்.
20. கண்மருந்து - சுமங்கலிகளுக்குக் கண்ணுக்கிடு மை கொடுத்தல்.
21. கோலத்தலைக்கெண்ணெய் - சுமங்கலிகளுக்கு மயிர்வாரிக்கொள்ள எண்ணெய் கொடுத்தல்.

22. பெண்போகம் - வறியவர்களுக்கு மணமுடிப்பித்தல்.
23. பிறர்துயர்காத்தல் - இனத்தவர்களைத் தீராக்கடன் முதலிய எவ்வித துயரத்தினின்றும் நீக்கிச் சம்ரக்ஷணைசெய்தல்.
24. தண்ணீர்ப்பந்தர் - தண்ணீர் கிடைத்தற்கு அருமையாகிய இடங்களில் தண்ணீர் வைத்துக்கொடுத்தல்.
25. மடம் - சத்காரியங்களின் உபயோகத்திற்கும் பற்றறத் துறந்தவர்கள் இருத்தற்கும் மடம் ஏற்படுத்தல்.
26. தடாகம் - தகுதியான இடங்களில் குளங்கள் வெட்டுதல்.
27. சோலை - வழிச்செல்வோர் இளைப்பாற்றிக்கொள்ள மரங்கள் வைத்து நிழல் தரும் சோலைகளை ஏற்படுத்தல்.
28. ஆவுரிஞ்சுதறி - பசுக்கள் தினவு மாற்றிக்கொள்வதற்குக் கல் நாட்டல்.
29. விலங்கிற்குணவு - மிருகங்கள் தம்மிஷ்டப்படி மேய்வதற்குக் காடுமுதலியவை வளர்த்து உணவுண்டாக்குதல்.
30. ஏறுவிடுத்தல் - கோவிருத்தியினிமித்தம் பொலிஎருது விடுதல்.
31. விலைகொடுத்து உயிர்காத்தல் - பறவை மிருக முதலியவற்றைப் பிடித்து இம்சிப்பவரிடமிருந்து விலைகொடுத்து வாங்கி அவைகளின் உயிரைக்காத்தல்.
32. கன்னிகாதானம் - கன்னிகையைத் தானஞ்செய்தல்.

---

உமாதேவியார் பரமகருணாநிதியாகிய பரமசிவனிடத்திலிருந்து இருநாழி நெல்லைப்பெற்று இல்லறதருமத்தை வளர்க்க வேண்டுமென்னுங் கிருபையினால் உடம்போடுகூடிய நிலைபெற்ற சீவகோடிகளெல்லாம் விருத்தியாகும்படி கருதிய விருப்போடு நீடித்து வாழ்தற்குரிய இடமாகிய புண்ணியவடிவமான காஞ்சிபுரத்திலுள்ள காமக்கோட்டத்தில் திருவறச்சாலை அமைத்து மேற்சொல்லிய முப்பத்திரண்டு அறங்களையும் செய்துமுடித்தனர் என்றால், இம்முப்பத்திரண்டு அறங்களின் பெருமை யாவரால் எடுத்துச்சொல்லுதற்கு இயலும். இத்தன்மையான அருமையுள்ள முப்பத்திரண்டு அறங்கள் யாவற்றையுமேனும் அவற்றுள் சிலவற்றையேனும் முன்செய்த தவப்பயனால் ஒவ்வொருவரும் தாம் தாம் பெற்ற செல்வத்திற்கேற்ப, வறியவர்களுக்கே செய்து அவற்றினாலாகிய பெரும்புண்ணியங்களைக் கைக்கொள்ளக்கடவர்கள். வறியார்க்கீதல் வேண்டுமென்பதனைவற்புறுத்தித்தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் "வறியார்க் கொன்றீவதே யீகை மற்றெல்லாங் குறியெதிர்ப்பை நீரதுடைத்து." என்று திருவாய்மலர்ந்தருளினார்.

௰

திருச்சிற்றம்பலம்.

அகத்தியமா முனிவரருளிச்செய்த

# பிள்ளையார் நோன்பு

## மான்மியவசனம்.

காப்பு.

திருவாக்குஞ் செய் கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தோனைக்
காதலாற் கூப்புவர் தங்கை.

நீடாழிசூழ் நிலவுலகின்கண்ணே வானளாவிய பல கொடுமுடிகளோடு மகிமை பொருந்தி விளங்கும் பொதிய மா மலையினை வாசஸ்தானமாய்க்கொண்டருளிய முனிப்பெருந்தகையினராகிய அகத்திய மகா முனிவரானவர் பிள்ளையார் கதை என்னும் நூலைச்செந்தமிழ்மொழியால் யாவரும் செவ்விதினுணருமாறுசெய்தருளினார்.

வடதிசைக்கண் இராசமாநகரம் என்னும்பெயருள்ள பதியொன்று பலவகையான விருக்ஷங்கள் நிறைந்த சோலைகள் சந்திரமண்டலத்தை அளாவிவளர, நீர்வளம் நிலவளம் மிக்கோங்கி விளங்கியுளது. அத்தகைச்சிறப்புவாய்ந்த இராசமா நகரில் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் எனும் அறுதொழிலையுடைய அந்தணர் ஒருவர் தம் இல்லாளோடு புத்திரப்பேற்றில் அவா மிகுதிகொண்டு, தேவாலயங்கள், தடாகங்கள், முதலாகிய பலவகைத் தருமங்களியற்றி, அம்பிகைபாகராகிய அருட்கடலை நோக்கி, அடியேங்கட்குத் தேவரீர் புத்திரப்பேறு அருளல் வேண்டும்என்று வணங்கிநின்று பிரார்த்தித்துப் பெருந்தவமியற்றினார்கள். தமது பத்தினியோடுகூட அவ்வந்தணர் புரிந்த பெருமை மிக்க தவத்தினைக்கண்டு, நூற்பிளவுபோல் நுண்ணிதாகிய மருங்குல் அமைந்த அருட்பிராட்டியார் தம் நாயகராகிய பரமசிவனுடைய செந்தாமரை மலர்போன்ற அழகிய திருவடிக

ளில் நமஸ்கரித்து வணங்கி, பொன்மயமாகிய மேருவை வில்லாக வளை த்து வித்தியுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் அசுரர் மூவருடைய பொன், வெள்ளி, இரும்பு எனும் இவைகளாலாகிய புரங்கள் மூன்றையும் பொடிபடுத்திய பரம்பொருளே! அடியவர்களின் பழவினையறுக்கும் அரனே! மாதவமியற்றும் மறையவர்க்கு அருள் புரிந்திடுக என, அதனைக்கேட்ட சிவபெருமான் அம்மையை நோக்கி, வேல் போலும் விழிகளையுடையாய்! இவ்வுலகில் இவர்களுக்குப் புத்திரப்பேறு இல்லை என்று அருளினர். உலக மாதாவாகிய அம்பிகை மனந்தளர்ந்து பரமசிவனுடைய திருவடிகளில் பின்னும் பலமுறை நமஸ்கரித்து வணங்கி, வேண்டுவோர் வேண்டுவன ஈயும் பரமகருணாநிதியே! இவர்கள் நம்மையே நம்பி நோற்று வருந்தினர்; ஆதலின், எம்பிரானே! நாயேன்பொருட்டு இவர்க்கு இன்னருள் புரிந்தருள்க என்று பணிவோடு கூறினர். உமாதேவியார் கூறிய எதிர்மொழியினால் பரமசிவன் பொழுது கோபங்கொண்ட மனமோடு கவுரியை நோக்கிப், பேதாய்! நீ போய்ப்பிறப்பாயாக என்றருளலும் காதளவோடி நீண்ட கண்களையுடைய கௌரி துன்பமடைந்து, தேவரீருடைய திருவைந்தெழுத்தைச் செபிக்காமல், ஒருநாளும் ஒழிதலில்லாத பிறவிப் பெருங்குழியில் தமியேன் விழக்கடவதோ என்று பாதமலர் தலையிற் சூட்டி வணங்கி சிறியேன் செய்த பிழையைப் பொறுத்தருளல் வேண்டும் எனப் பிரார்த்திக்க, தேன் கமழுங் கொன்றைப் பூமாலையையணிந்த சடைகளையுடைய தயாநிதியாகிய கடவுள் சிறிது புன்முறுவல் கொண்டு, நீ போய் நம்மை நோக்கி யருந்தவமியற்றிய மறையவர்க்குப் புதல்வியாய்ப்பிறக்கக்கடவாய்; நாம் அங்குவந்து உனக்கு மணமாலைசூட்டி மனைவியாய்க் கொள்வோம் என்று திருவாய் மலர்ந்தருளினர்.

உலகுயிர்கள்யாவையும் ஈன்றளித்துக்காக்கும் ஒருதனிப்பெருமுதல்வியாய உமாதேவியாரானவர் தம் நாயகராகிய பரமசிவனது கட்டளைப்படி மகத்தாகிய தவம் இயற்றிய பூசுரர்க்குப் புத்திரியாய் வந்து அவதாரஞ்செய்தருளினர். அப்பொழுது இவ்வுலகோடு எழுலகும் மகிழ் வெய்தின. வானில் தேவதுந்துபி முழங்கின. கருமையாகிய பரவை போலும் நெடுங்கண்களையுடைய அரமங்கையர் நடித்தனர். அந்நகர் மாந்தரன்றி எந்நகர் மாந்தரும் களிப்பு மிகப்பெற்றனர். பல்வகைத் தருமங்களும் விளக்கம் பெற்றன. சராசரங்களையெல்லாம் பெற்ற முதல்வியைத் தாம் பெறும்படியான தவத்தைச் செய்த அந்தணரின் மேன்மையை யாவர் கூறவல்லார். அழகுக்கணிகலமாய் விளங்கும் திருவுருவம் பொருந்திய உமாதேவியாராகிய பெண் மதவு நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாய் வளர்ந்து திருந்தாத இளங்குதலை மொழியினால் தந்தை தாயரை மகிழ்வித்து, தோழிமாரோடு புறம்போந்து சிற்றில் விருந்தாகச் சிறுவர்க்

குச் சிறுமணற்சோறு சமைத்து இட்டு, முருகவேளும் வாய்வைத்து ண்ணாத இளமுலையை வாய்வைத்துண்ணப் பாலைவதனக்களித்து, கழ ங்குகற்று, பந்துவிளையாடி, அம்மனைபயின்று, ஊசல் ஆடி, ஆயத்தார்க் கும் பிதா மாதாக்களுக்கும் களிப்பூட்டி வளர்ந்து ஐந்து வயது நிறை யவும், தாய் தந்தையர் இருவரும் தம் மகளை விவாகஞ்செய்துகொடு க்க நினைத்து விழுமிய குடியிற் பிறந்து வேதவேதாந்தங்களை யோதியு ணர்ந்து வல்ல விப்பிரசிரேட்டர் ஒருவர்க்கு மணம்செய்ய நிச்சயித்து, அதனைத் தம் புதல்விக்குணர்த்த, புதல்வி அவர்கள் எண்ணத்திற்கு இணங்காது மறுத்துரைத்து, பிறப்பும் இறப்பும் இல்லாத பெருமை யுடையோற்கல்லது வேறொருவர்க்கு வதுவைசெய்ய யான்அணுகேன் என்றனள். அதுகேட்ட தாய் தந்தையர் பிறப்பிறப்பில் பெருந்த கையை மணஞ்செய்தல் உனக்கு அருமையாகும் என்றுசொல்ல, எவ ராலும் செய்தற்கரிய தவஞ்செய்து அதனால் யான் நிமலனை வதுவை செய்வேன் என்றுகூறி, இருத்தமாகிய நன்மைபொருந்திய முப்பத்தி ரண்டறங்களையும் சிறப்பெய்தஅமைத்து, மணிகளும் தேன் ஒழுகுஞ் செந்தாமரை மலர்களும் நிறைந்துள்ள தடாகத்தையடைந்து அம்மை அருந்தவம் புரியலுற்றனர். மாதவநெறிநிற்கும் மலைமகளின் அன் பும் காதலும் யாவர்க்கும் காட்டுதலைச் சிவபெருமான் தம் திருவுளத் திற்கொண்டு தவத்தைச் சோதனை புரிவார் போன்று கிழப்பிராமண யோகிபோலத் திருவடிவங்கொண்டு கரங்களிற்றண்டும் குடையுந்தா ங்கித்தள்ளாடிய நடையுடன் உமை தவம் புரியும் வாவியை யடைந்து நறுமணங்கமழும் கூந்தலையுடைய தையலை நோக்கி நீ யாதுபயன்வே ண்டித் தவம் செய்கின்றாய் எனக்கேட்க, அம்மை தமியேன் தவம் செய்வது கொன்றைப்பூமாலையை யணிந்த சடைகளையுடைய பரமசி வனையேவதுவை புரிந்துமருவுதறபொருட்டாகும் எனக்கூறினர். கை யில் மான் மழு மறைத்து நரை முதிர்ந்து உடல் திரைந்து பழுத்த கிழவடிவந்தாங்கிய மறையோகியார் உமை கூறிய மொழிகேட்டு இரு கரங்கொட்டி மிகுநகை செய்து நன்று! நன்று!! உன் தவம்! உலக ங்களையெல்லாம் படைத்துக்காக்கும் பிரமவிட்டுணுக்களாலும் இன் னும் அறியப்படாத இயல்பினையுடைய கடவுளை உன்னால் அடைய முடியுமோ? ஒருக்கால் அடையினும் அவர் உன்னை வதுவை செய் வரோ? மேலும், அவருடைய இயல்பைச் சிறிது சொல்கின்றோம் கேள் எனக் கூறுகின்றார். நீ விரும்பிய முக்கட் பெருமானுக்கு உடு க்கும் ஆடை தோல், ஏறும் வாகனம் மாடு; அணியும் ஆபரணம் நஞ்சு பொருந்திய அரவு, முழுவெலும்பு, வெண்டலைமாலை, பன்றிக்கொம்பு முதலியவைகள்; ஓடுபிட்சைப்பாத்திரம்; ஊண் பிச்சை, வெய்ய நஞ்சு, இறந்தாரைச் சுடும் சுடலை நடன சாலை; தலையிற் சூட்டுவ வெள்ளெரு க்கு, அறுகு, நீர், கொன்றை, பாந்தள், நொச்சி, ஊமத்தை முதலிய பலவுமாகும்; அணியும் சாந்தம் வெண்பொடி; கையில் ஏந்துவது மான், மழு, சூலம், துடி, தழல் ஆகிய இவைகள். சூழ்படை பூதங்கள்; தந்

தை தாயிலி; உறவொடு வடிவு குணங்களும் இல்லை; இத்தன்மைகள் உடையானை நீ விரும்புவது என்? அவ்வளங்களெல்லாம் உன்னுடையன ஆவதற்கோ? மேனியின் எழில் நலங்கெட நீ இயற்றும் தவம் நகைப்புக்கிடமாகின்றது. அவ்வாசை யொழிக என்று இங்ஙனம் கூறினர். கர்ணகடூரமாகிய இம்மொழிகளைக் கேட்ட தையல் கரங்களால் இருசெவிகளையும் பொத்தி, கண்ணுதல் நாமம்போற்றிக் கோபம் பொருந்திய மனத்தோடு கூறுவாள். தசைபெலா மொடுங்க மூத்த பித்தா! கேடிலா எம்பிரான்றனிடம் ஒருசிறிதும் அன்பு உனக்கில்லை; காட்டின் கண் பட்சிக்கூட்டங்களைக் கவரும்படி தன் தலையில் செடிகளைக்கொண்ட வேடன் தன்மைபோல நீ பெரியோர் வேடம் கொண்ட தன்மை இருக்கின்றது. முன்னாளில் தக்கன் அன்பின்றி நிமலனை இழிவு கூறியதும், பின்பு அவன் பட்டபாடும் நீ கேட்டதில்லையோ! ஈசுரனை என்முன் இகழ்ந்தனை! நடைதளர்ந்து உடல் திரைந்து தலையசைய மூத்தாய்! அந்தணா! இந்நாள்காறும் மறைகள் சிறிதும் ஓதவில்லையோ! வேதங்கள் யாவையும் ஓதினும், அவற்றின் சார்பிற் சேராமல் தீயொழுக்க மேற்கொண்டு முக்கணிறைவனை இகழ்ச்சி செய்து வீடு பெற்றுய்யாது உழலுமாறு முன்னாளில் வேதியர் பெற்றசாபம் உன்னையும் மயக்காது விடுமோ! ஆயினும், மறையோருள்ளே பரிசுத்தமாகிய சிவவேடந் தாங்கி எம்பெருமானுக்குத் தொண்டுசெய்வாருமுண்டு. அவர்போல நீயும் சிவவேடம் பூண்டும் நிமலனையிகழ்ந்தாய்! ஆதலின், அசுரராதியருள்ளும் உன்போற் றீயவர் இல்லை. விருப்பும் வெறுப்பும் இல்லாவிமலனை ஈண்டு நீ இகழ்ந்த எல்லாம் யாவரையும் பாலிக்கும் அன்பு பூண்டமைக்கு அறிகுறியாகும். ஆதலால், புகழ்ச்சியன்றி வேறில்லை. அன்றியும், முக்கண்மூர்த்தியின் இயல்பை அறியும ஆற்றல் யாவர்க்குண்டு. வேதங்கள் ஒருவாறு சிறிது அதனையுரைக்கும். அவ்வியல்பு உனக்குச் சொல்லும் தகுதியுள்ளதல்ல; ஏனெனில் நீ சிவவேடம் தரித்தும் சிவநிந்தனை செய்கின்றமையாலென்க என்று சொல்லி, இனி இங்கு நில்லாதே போவென அம்மையார் கூற, அம்முதுவேதியர் யாம் இப்பொழுது உன்னைக் கடிமணஞ்செய்யக் கருதிவந்தோம். தொடிகள் விளங்கும் மென்கை மாதே! நீ இதற்கிசைக எனக்கூறவும், உமை இனி இங்கிருப்பதுகூடாது என்றுநினைத்து அயலில் உள்ள மனையிற் செல்ல, தாதியர்வந்து உமையை வணங்கி, தாயே! மனத்தில் வாட்டங்கொள்ளவேண்டாம் எனக்கூறிவிட்டு அச்சேடிமார்கள் தாய் தந்தையரிடம் சென்று தடாகக்கரையில் ஒரு கிழப்பிராமணன்வந்து புதல்வியின் தவச்செய்கையை அழித்தான் என்றார்கள்.

அதுகேட்ட தாய் தந்தையர் அவ்விடத்தில் வந்திருக்கும் பெரியோரை இவ்விடத்தில் அழைத்துவாருங்கள் என்று தாதிமார்களுக்குக் கட்டளையிட, அவர்கள்போய் கிழவேதியரை நோக்கி, சுவாமிகளே! தாங்கள் எங்கள் தலைவியின் தந்தை தாயரிருக்கும் வீட்டுக்கு

எழுந்தருளல் வேண்டும் எனக்கூறிப் பணிவுடன் அழைத்தார்கள். அப்
பிராமணரோ மேகம்போற் கறுத்த கூந்தலில் மலர்களையணிந்த அம்ம
ங்கைவந்து நம்மை யழைக்கின் நாம் வருவோம். இல்லையேல், நாம்
வரமாட்டோம் என்றார். தாதியர்கள் அம்முதியவர் கூறியவைகளை
வந்து சொல்ல, தாய் தந்தையர் தம்புதல்வியைப் பார்த்து அம்மா!
பொய்கைக்கரையில் வந்திருக்கும் நல்ல தவமுனிவரை நீபோய் இவ்
விடத்துக்கு அழைத்துவாஎன, மடந்தைகோபங்கொண்டவளாய் தன்
தோழிகளின் முகத்தைப்பார்த்துக் கூறுவாள். நான் நெற்றிக்கண்ணை
யுடைய நிமலனையே மணஞ்செய்வேன்; என் பொலிவுபொருந்திய தன
ங்கள் அந்நிமலனுக்கே அடைதற்கு எளியனவாகும். ஆதலால், நான்
மறைமுனிவரைப்போய் அழைக்கமாட்டேன் என்று இவ்வாறு மறு
த்து மொழிந்தாள். தாய் தந்தையர் பின்னும் வணங்கி மாதவமுனி
வை அடிதொழல் உலகமுறையாகும்; அதனால் நீ மணஞ்செய்யாவிடி
னும் போய் அம்முனிவரின் திருவடிகளை வணங்குகஎனப் பணிந்துரை
க்க, அம்மையார் கோபந்தணிந்து தாய்சொல் மறுத்தல் பாவம் என்று
அஞ்சி, அதற்குடன்பட்டு, பரமசிவனாகிய கிழப் பிராமணரெதிர்செ
ன்று செந்தாமரை மலர்போலும் அழகியதிருவடிகளில் நமஸ்காரஞ்செ
ய்து இல்லத்திற்கு அழைத்துவந்து ஆசனத்திலிருத்தி எண்ணெய்க்கா
ப்பணிந்து தாநீராட்டி மேன்மையுள்ள தவிசின்மேல் இருத்தி பொற்க
லத்தில் தித்திப்பு, கைப்பு, புளிப்பு, உறைப்பு, துவர்ப்பு, உவர்ப்பு
எனும் அறு சுவைகளையுடைய உண்பனவும், தின்பனவும், நக்குவன
வும், பருகுவனவும் ஆகிய நால்வகையுணவுகளையும் அம்மை தனதுவளை
யலணிந்த அழகிய கையாற் படைக்க மறைமுனிவர் அமுதுசெய்தரு
ளினார். அதன்பின் சந்தனம், குங்குமம், பனிநீர் முதலிய வாசனைத்தி
ரவியங்களை அழகிய பவளம்போலும் திருமேனியில் விளங்க அணிந்து,
செவ்வந்தி, செங்கழுநீர், செண்பகமுதலிய மலர்களைத் திருமுடியில் தரி
த்து, தக்கோலம் சாதிக்காய், பச்சைக்கற்பூரம், பாக்கு, வெற்றிலை முத
லியவற்றையும் கொண்டுவந்து எதிர்வைத்து அம்மைவணங்கிநிற்க, சிவ
பெருமான் அவள் அன்பின் பெருக்கைக் கண்டு மிகமனமகிழ்ந்து நாம்
இனி இவளுக்கு அருள்புரிதல் வேண்டுமெனத் திருவுளங்கொண்டனர்.

சிவபெருமான் அவ்வாறு திருவுளங்கொண்டு, கற்றையஞ்சடை
யும், கங்கையும், மதியமும், நெற்றிக்கண்ணும் நீலகண்டமும், கரம் நா
ன்கும், மானும், மழுவும், சர்ப்ப கங்கணமும், திருமேனியில் அணிந்த
திருவெண்ணீறும், முந்நூலும், அரையிற் புலித்தோலாடையும், பாதத்
திலணிந்த மறைச்சிலம்பும், அழகிய திருவடிவமும் பாலினுமினியமொ
ழியுடைய மங்கைக்கு விரும்பிக்காட்ட, உமை கரங்களைச்சிரசின்மேற்
குவித்து நமஸ்கரித்து வணங்கித் தரிசித்து நின்றனர். பெற்றோர் இரு
வரும் இன்றே நாம் பாவையைப்பெற்ற பயனைப்பெற்றோமென எழும
டங்கு களிப்படைந்தார்கள். பின் தாம் பெற்ற மங்கையைச் சிவபெ

ருமானுக்கு மணஞ்செய்து கொடுக்கவேண்டிய செயல்களைச் செய்ய
தொடங்கினார்கள். மறைநூல் விதிப்படி மணச்சாலை இயற்றின
மணங்காண வருந்தேவர்களுக்கு ஆசனங்களும் அமைத்தனர். கட்ட
ழகு வாய்ந்தகாவணங்கள் பல மணவணிகாணவருவோர் இருக்க அ
த்தனர். கன்னியின் மணமெழுதிய திருமணவோலையை எங்கும் அ
ப்பினர். நகர் முழுதும் மணமுரசு அறைவித்தார். அறைதலு
அந்நகரத்தார் யாவரும் உடல் பூரித்து, களிப்பு மிகுந்து வ
நகரை அலங்காரஞ் செய்யத்தொடங்கினர். வீதிதோறும் மாலை
ளோடு சந்தனக்குப்பைகளையும் எடுத்து அகற்றுவார். பனிநீர் தெ
த்துப் புழுதிகளை யடக்குவார். சுவர்களை வெள்ளைபூசிப் புதுக்குவா
அவைகளிற் சித்திரங்கள் எழுதுவார். திண்ணைகளிற்குங்குமம் பூசுவா
முளைப்பாலிகை நிறை குடம் மணிவிளக்குகளை வேதிகைகளில் நிை
பார். வாயில்களில் தோரணம் கட்டுவார். வீதிகள்தோறும் நடை
காவணம் இயற்றுவார். கமுகு கரும்பு வாழைகள் நாட்டுவார். கொ
டிகளை தூக்குவார். பந்தர்களில் பூவொடு பனிநீர்சிந்தி, பொரியொ
பொற்சுண்ணமும் வீசி, பாவை விளக்கேற்றி, பசும் பொன் மாலைக
நிரைப்பார். கண்டோர் இவை கடைவீதிகளோவென ஐயங்கொ
ளும்படி மரகதமாலைகளும் மாணிக்கக்கோவைகளும் முத்தாஹாரங்
ளும், அரதனக்கோவைகளும் தெருக்கள்தோறும் அணிபெறத்தூக்
வார். இவ்விதம் நகரை அழகுபெற அலங்கரித்தனர். மாதர்க
பழைய கலன்களை விடுத்துப் புதிய கலன்களைச் சூடுவார். பனி
அளாவிய குங்குமச்சாந்தைக் குவிமுலை புதையுமாறு மெழுகுவா
மெழுகிய ஈரம் புலர்த்துவார். நறுமணம் நிறைந்த கலவைகள் அ
வார். அழகிய கண்ணாடியில்தம் அணிநலங்காண்பார். கண்ணுக்
மையிட்டுக்காளையர்மேல் நாட்டுவார். பாதங்களில் செம்பஞ்சுட்
வார். இவ்வாறு மாதர்கள் தம்மையலங்கரித்துக்கொண்டாராய் ம
யவர் பத்தினியிடம் வந்து மணம் வினவுவார். இன்று கன்னியி
மணங்காண்போமென்பார். இது நிற்க.

மணமுரசறையைக் கேட்ட மாலயன்முதலிய வானவர் யாவ
கண்ணுதற்பெருமான் கடிமணங்காணுமாறு வந்து சேர்ந்தனர். அ
போது சிவபெருமான் அரையிற் பூம்பட்டாடை தரித்து அதன்மே
இரட்டை அரைஞாண்பூண்டு, குஞ்சியைப் புதுமலர்களால் அலங்
த்துதிருமேனியிற்சாந்தம், கஸ்தூரி, தண்மைபொருந்தியபனிநீர்கல
கலவையாதியணிந்து, இருசூரியர் நுழைந்திருந்தாற்போல இருசெ
ளிலும் பொற்குண்டலங்கள்விளங்க அணிந்து, கண்டத்தில் கண்டி
சாத்தி, மார்பில் முத்துமாலைகளோடு புஷ்பமாலைகளும் தரித்து, தே
களில் அங்கதம் அணிந்து அழகுபொருந்திய உத்தரீயமும் சாத்தி,
லில் பவித்திரம் பூண்டு, தாள்களில் நூபுரம் இட்டு இவ்வாறு
திருமணக்கோலங்கொண்டு தேவதுந்துபி ஐந்தும் ஆர்க்கவும், இய

பூதர் அரக்கர்கள் மங்களவாத்தியங்கள் ஒலிக்கவும், சங்கநாதம் தழைத்தோங்கவும், குடமுழாவொலி எங்கும்விம்மவும், தும்புருநாரதர் கீதம் பாடவும், குறட்சிறுபூதங்கள் குதூகலித்தாடவும் இவைபோன்ற இன்னும் அனேக வைபவங்களுடன் மனையினுள் எழுந்தருளும்போது மங்கலமகளிரோடு அம்மையைப்பெற்ற மறையவரின் பத்தினியார் வந்து சிவபரஞ்சுடரின் பாதபதுமங்களைக் கங்கைநீர் கொண்டுவிளக்கி அந்நீரைத் தன்தலையிற் பெய்துஉள்ளும் உட்கொண்டு பாதமலரை வெண்பட்டால் துடைத்து பனிநீர் ஆட்டி கஸ்தூரிச்சேறுபூசி மணமலர் சாத்தி, கைகூப்பி வணங்கிநின்று அடியேன் அருமையாற்பெற்ற அணங்கினைத்தேவரீர் திருமணஞ்செய்துகொள்ளல் வேண்டுமென்று சொல்ல, எம்பிரான் அதற்கிசைவாராய்ச்சிறிதுபுன்முறுவல்கொண்டு மணச்சாலையை யடைந்து மணித்தவிசில் வீற்றிருந்து தம்மைச் சூழ்ந்த தேவர் யாவரையும் இருக்கும்படி கடைக்கண்ணால் குறிப்பிட அவர்களும் அவ்வாறே தங்கள் தங்களுக்கு ஏற்ற ஆசனங்களில் இருந்தனர்.

இலக்குமியும் சரசுவதியும் அம்மையை மணப்பெண்ணாக அலங்கரிக்கத்தொடங்கி அங்கங்கையைத் தூநீராட்டி, பட்டாடையுடுத்து பஞ்சினும் மெல்லிய சிற்றடியிற் செம்பஞ்சூட்டி நூபுரம் பாதசாலம் கிண்கிணிகள் அணிந்து அரையில் காஞ்சி, மேகலை, கலாபம், பருமம், விரிசிகைகளைப் பூட்டி, மார்பில் பொன்மாலை மரகதமாலை பவளமாலை முத்துமாலைகளை வாசனைநிறைந்த களபச்சேற்றினால் தொய்யில் எழுதிக்கோலமிட்ட கொங்கைகள் வருந்த அணிந்து, தோளில் கடகமும் கரத்திற்சூடியுமணிந்து, கைவிரல்களிற்கணையாழிகள் தரித்து, காதில் குழையுந்தோடுமணிந்து, நுதலில் இலம்பகமணிந்து பொட்டிட்டு, சுட்டிசாத்தி, திருமுடியில் உத்தி, எதிர்முகமஞ்ஞை, வலம்புரி, மகரம் என்னும் தலைக்கோலமணிந்து இவ்வாறு அம்மைக்கு அணிகள் சாத்தி, அழகுசெய்து சிவபெருமான் அருகிற்கொண்டுவந்து இருத்தினார்கள். உமையைப் புத்திரியாகப்பெற்ற மறையவர் தம்பத்தினி நறும்புனல் வார்க்க, ஆதியின் அடிமலர்விளக்கி விரைச்சாந்தும் புதுமலரும் புனைந்துசெய்யவேண்டிய கடன்பலவும் விதிமுறைபாற் செய்து பூசனைபுரிந்தபின் தம் புதல்வியின் கையைப்பரஞ்சுடரின் கரத்துள் வைத்து நேசமோடு என் புதல்வியை யளித்தேன் என்று வேதமந்திரங்கள் புகன்று வாசனைபொருந்திய நல்லுதகம் வார்த்தார். சங்கரர் கன்னியை மங்கலமுறையால், மறையவர்கொடுப்பக் கொண்டனர் எனின், மற்றவர் அருளினீர்மையை யாவா உணர்வார். அந்த அமையத்தன்னில் அமரமாதர் ஆடினர்; சித்தர் கந்தருவர் முதலோர் கீதம் பாடினர். தேவதுந்துபி முழங்கின. தேவர் பொற்பூமாரி பொழிந்தனர். மற்றையர் யாவரும் பேருவகை மிகுந்தனர். தேவரும் பூதேவரும் மறைகளோதினர். சல்லரி, திமிலை, காளம், தண்ணுமை, சங்கம் ஆதிபல்வியங்கள் முழக்கிப் பூதர்களார்த்தனர். நாமகளும் பூமகளும் ஏழிசைக்

கீதம் பாடினார். அப்போது அம்மறையவர் மதுரம் பொருந்திய கதலி, மா, பலா முதலிய கனிவகைகள் ஆவின்பால், நெய், தேன் முதலாகிய மதுரமுள்ள சுவைவர்க்கங்கள் பொற்பாசனத்திட்டு எம்பிரான் முன் வைத்து எம்பிறையே! இவைகளை நுகர்தல்வேண்டும் எனத் தொழ ஆண்டநாயகன் அருள் பூத்துத் தமது திருக்கரத்தால் அவைகளைத்தொட்டு அமுதுசெய்தாற்போல் மனமகிழ்ந்தனர். தாமரையானாகிய பிரமதேவர் தம் மைந்தர்களோடு இருந்து துடுவையால் நறுநெய்சொரிய தெய்வச்செந்தீ வலஞ்சுழித்து ஆர்த்து எழுந்தது. நான்முகன் நான்மறைகள் ஆர்க்கவும் தூரியம் சங்கம் ஒலிக்கவும் மறைநூல் விதிப்படி வேள்விச்சடங்குகள் செய்ய சம்புவானவர் மலைமகளுக்கு மங்கலநாண்சாத்தி செங்கை பற்றினர். பிறைமுடிப்பெருமான் தம் பத்தினியோடு கையிற்பொரிவாங்கி செந்தீயிற் சொரிந்து எரிவலம்வந்து அம்மிமேல் மணுட்டி பாதத்தை அங்கையாற்பற்றிவைத்து அருந்ததிகாட்டி விதிவழுவாது மங்கலவேள்வியினை நிரம்ப இயற்றி முடித்தனர். இம்மணக்காக்ஷியைத் தரிசித்த மால் அயன்முதலாம் வானவர் யாவரும் அம்மையப்பனை வணங்கி விடைபெற்றுத் தத்தம் பதிகளுக்கேகினர்.

பிரானனர் ஆதிநாயகன் அன்றிரவு அருந்துயில்கொண்டுகாலையில் எழுந்து உமையை நோக்கி நாம் உஞ்சைநகர்க்குப் போவோம்; நீயும் நம்முடன் அங்குவாவென்று அழைத்துக்கொண்டு செல்லும்போது வழியில் ஓர் மலைச்சாரலில் எம்பிரானருளால் ஒரு யானை மற்றொரு பெண்யானையுடன் கலந்து மருவிக்கொண்டிருந்தது. அதனை அவிர்சடைக்கடவுள் கண்டு நாம் செல்லுகின்ற இவ்வழியின் ஒருபக்கத்தைப்பார்; மறுபக்கத்தைப் பாராதே என உமையினிடம் கூற, உமை நம் நாயகனுக்கு நம்மையன்றி இன்னும் வேறும் ஒருத்தி உண்டு போலும் என்று ஐயங்கொண்டு தம் நாயகர் பார்க்கவேண்டாமென்ற பக்கத்தை மிகு விருப்புடன் பார்த்து அத்திசையில் பிடியுங் களிறும் மருவுதலை நோக்கி, பிராணநாயக! நாம் இருவரும் இவ்விடத்தில் பெண்ணும் ஆணுமாகிய யானையின் உருவங்கொண்டு அதுபோல மருவுதல் வேண்டுமென்னக் கணவரிடம் சொல்ல, மதயானையின் தோலை உரித்த கடவுள் அதற்குடன்பட்டுத் தாம் மதயானையின் ஆணுருவங்கொண்டார். நறுமணம் வீசும் கூந்தலையுடைய உமை பிடிவடிவங்கொண்டார். உயிர்கங்களுக்கெல்லாம் தந்தையும் தாயுமாய் விளங்கும் சங்கரனும் சங்கரியும் தாங்கொண்ட களிறும் பிடியுமாகிய உருவத்துடன் கலவி செய்தனர்.

அக்கலவியில் குவலயம் விளங்கவும், வானோர் தங்கள் தங்கள் பதவிகளில் நிலைநிற்கவும், திருவெண்ணீறுந் தருமமும் செழித்தோங்கவும், எவ்விடத்தும் மாதம் மும்மாரி பொழியவும், தண்டையும் சதங்கையும் ஒலிக்கின்ற செந்தாமரை மலர்போல் முற்றும் சிவந்த உபய

ணங்களும், குண்டவண்டியும், குளிர்ந்தமுத்துமாலையும், வெண்மையாகிய ஒளி நிறைந்த திரிபுண்டரந்தரித்த திருநுதலும், முப்புரிநூலும், திருப்புயநான்கும், ஒளிபொருந்திய முத்துமாலை விளங்கும் கண்டமும், உலகங்களைப்பரிபாலிக்கும் அழகிய யானைமுகமும், கிம்புரி பிரகாசிக்கும் வெள்ளிய தந்தம் இரண்டும், பவளம்போற்சிவந்த இதழும், இமைகொட்டாத முக்கண்ணும், முறம்போலும் இருசெவிகளும், சடைமுடியும், செவ்வானம்போன்ற நிறமும், அங்குசபாசமும், உந்திச்சுழிமேற்கட்டிய உதரபந்தமும், பொருந்தி ஐங்கரக்கடவுள் வந்து அவதரித்தருளினார். இவ்வாறு அவதரித்த புதல்வனைநோக்கி ஐம்முகன் சொல்லுற்றார். புதல்வா! உன்னைவந்து வழிபாடுசெய்யும் வானோர் மண்ணோர்களின் வல்வினைகளையகற்றிப் பிரமவிஷ்ணு முதலாகிய தேவர்க்கு இன்றுமுதல் இறையாய் இருக்குகஎன்று இறையோன் அருளினார்.

இவ்வாறு அருள்செய்து புத்திரனை அங்கிருத்திவிட்டுப் பரசுபாணியானவர் மலைமகளோடு மேகங்கள் தவழ்கின்ற சோலைகள் விளங்கும் பெருமைபொருந்திய உஞ்சைநகரம்போய் அநேககாலம் இருந்தருளினார். அப்படியிருக்குங்காலத்தில் மாதவசிரேஷ்டராகிய காசிபமுனிவருக்கு மாயையின் வயிற்றிற்பிறந்து செய்தற்கரிய வேள்விகள் செய்து ஒப்பற்ற வரங்கள் பல பசுபதியிடம் பெற்றுப் பிருதிவிக்குரிய ஆயிரகோடி யண்டங்களில் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் தம் வசப்படுத்தி ஒரு கோல் செலுத்தி அரசாண்ட சூரபன்மன், சிங்கமுகாசுரன், தாரகன் முதலிய மிகு கொடிய அசுரர்கள் பொன்னகையாரும் இந்திரன் முதலாகவுள்ள இமையவர்களுக்குப் பெருந்துன்பமியற்ற, அத்துன்பத்தைப் பொறுக்கவியலாமல் புத்தேளிரொடு புரந்தரனும் மலரயனொடுமாலும் கண்ணுதற்பரனை யடைந்து ஹே கிருபாநிதே! ஹே ஆபத்ஸஹாய! ஹே நீலகந்தர! ஹே ஆத்மநாயக! ஹே சம்போ! ஹே திரிபுராந்தக! ஹே பசுபதே! ஹே விச்சுவாதிக! ஹே விச்சுவசேவிய! ஹே கங்காதர! ஹே சந்திரசூட! என்று தோத்திரஞ்செய்து திருவடிகளில் பன்முறை நமஸ்கரித்துச்சூரன் முதலிய அசுரர்களால் பெருந்துயர்க்கடலில் அமிழ்ந்தி வருந்தும் தமியேங்களின் குறையை நீக்கியருளல் வேண்டும்என்று பிரார்த்திக்க, சூரன் ஆதியரை அழிவுசெய்தற்கு வேலாயுதம் ஏந்திய கையையுடைய குமரன் ஒருவனைப்பெற்றுத் தருவோம் என்று சொல்லி மாலயன் இந்திரன் ஆதிவானவர்க்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு ஆலமர் கடவுள் தையலுந்தானும் கலவியிற் கூடாதிருக்க, தேவர் யாவரும் சேர்ந்து யோசித்து அக்கினிதேவனை விருப்புடன் அழைத்து வெள்ளியங்குன்றில் விமலனை யெய்தி, சூரன் வலிமையும், சுரர்படும் துன்பமும் அரவணிந்தோனிடம் முறையிடுக என்றனர். அக்கினிதேவன் அரன் காமனை எரித்த நெற்றிக்கண்ணுடைய கடவுள்என்று அஞ்சவும், பொன்

னுலகாளி கூறுவான். பாவக! நீலகண்டருடைய நேத்திரங்கள் மூன்றில் நீ நெற்றியிலுள்ள நயனமாம். ஆதலின், நீ அவ்வரன் முன்செல்ல அஞ்சாதே. அதனால் யாதொருகுற்றமும் வாராது; நீ போய்க் கூறுக என்று இந்திரன் கூறினான். அதுகேட்ட அழற்கடவுள் மனந்துணிந்து கயிலையில் எம்மையாளிறையவன் உமையாளோடு பொருந்தி நிறைந்த இன்பத்தோடு இனிதிருந்தருளும் பள்ளிமண்டபத்தையடைதலும் உமையவள் திகைத்து நாணமுற, அக்கினியின் வரவையுணர்ந்து ஐம்முகக்கடவுள் தமது ஐந்துமுகத்தினோடு அதோமுகமுஞ்சேர்த்துத் திருமுகங்களாறாகிச் செந்தழற்கண் ஆறிலும் தீப்பொறிகள் ஆறு தோற்றி, அவற்றை அப்பாவகன் கையிற் கொடுக்க, அவன்கொண்டுவந்து வாயுவிடம் கொடுக்க, அவ்வாயுவும் தீப்பொறிகளின் வெப்பத்தைத் தாங்கும் வலியின்றிக் கங்கையிடம்சேர்க்க, அவளும் பொறுக்கமுடியாளாய்ச் சரவணப்பொய்கையிலிட, அச்சரவணவாவியில் நிலையுற்று, ஆறுமணிமகுடமும், பன்னிருதோளும், விளங்குகுண்டலமும், கமலம்போலும் திருமுகமும், அசுரர்களின் வாழ்வை அகற்றும் வில்லும், வேலும், அம்பும் தாங்கிஅறுமுகக்கடவுளாகிய எம் ஐயன் அவதரித்தனர். அவதரிக்கவும், பரமனுடன் பார்வதி அங்கு சென்று எடுத்துத் தங்கள் நாடு இழந்த இந்திரன் முதலோரைக் காத்தருள் செய்யென விடைகொடுத்தனுப்ப, கிரவுஞ்சமலையொடு தாரகனும் சூரனும் ஏனையரும் அழியச்செய்து இந்திரனுக்கு அவனுலகு அளித்துக் குமரவேள் அமராவதியில் இனிதிருந்தனர். அதன்பின், போர்செய்யும் வேலையுடைய தாரகனைக்கண்டு தேவரும் தேவமாதரும் பயந்து நடுங்கி, சிவபெருமானையடைந்து வணங்கி அருட்கடலே! வாசனை வீசுகின்ற கடப்பமாலையணிந்த அறுமுகப்பரமன் மாநகர் போகாது அருளல்வேண்டுமென, இறைவனும் வெகுண்டு கந்தவேளைக் கோபிக்க, அக்கந்தமூர்த்தி தேசம்போக, உமையாள் அருந்துயர்கொண்டு வருந்தினள். எம்பிரான் உமைக்கு நீ வருந்தல் ஒழியென்றுகூறி, விஷ்ணுவைச் சாட்சிவைத்து உமையுந்தானும் விருப்புடன் சூது ஆட அவ்வாட்டத்தில் உமைவென்று மகிழ்ச்சிகொண்டு சூதில்வென்றவர் யாவர் என்று கன்றினால் விளாவெறிந்த கண்ணனைவினவ, கண்ணன் நீதிநெறியில் நில்லாதவனாய்ச்சூதாட்டத்தில் பரமனேவென்றார்; நீ தோல்வியடைந்தாய் என்பதாய்ப் பொய்சொல்ல உமைகோபங்கொண்டு சக்கிரபாணியை நீ போய்ப்பூமியில் குருட்டுப்பாம்பாகி யானைமுகப்பிள்ளையிருக்கும் ஆலின்கீழ் இருந்திடுகென்று சாபமிட, அம்மையின் சாபம்பெற்றமால் பாம்புருவமாகி அவ்வாலின் கீழிருந்தனன்.

வி[illegible]ள் பூ[illegible]ல்ஊன்றிப்படணைகள் பருத்துக்கிளைகள் வான[illegible] [illegible] விளங்கும் ஆலமரத்தின் அடியில் இருந்து கதலி, பலா, மா முதலியவற்றின் கனிகளோடு கரும்பு கிழங்குகளும் வேண்டுவன அளித்து வழிபாடுசெய்யும் அடியார்களுடைய வலியவினை

களை நீக்கி விளங்கும் யானைமுகக்கடவுளின் பெருமையைப் பூமியிலுள்ளாருக்கு அறிவிக்கும் எண்ணங்கொண்டு வானிலுள்ள சப்தகன்னிகைகள் நூலேணிவழியாய் ஆகாயத்திலிருந்து பூமியிலிறங்கி அவ்வாலின் கீழுள்ள விநாயகக்கடவுளைக் கைதொழுது துதித்து அவற்பொரியும் வெற்றிலை பாக்கும் வைத்துக் கார்த்திகைமாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்தின் மறுதினமாகிய உரோகணி நக்ஷத்திரத்தில் கட்டிய வஸ்திரத்திலிருந்து, இழையெடுத்து அழகியபுயத்தில் இருபத்தோரிழைகட்டி வேதத்தின் ஆதியும் பூமியின் எழுத்தும், சிவனுக்குரிய எழுத்தோடு மூன்றெழுத்தால் மொழிந்த மந்திரத்தை மனத்துள் இருத்தி ஒப்பற்ற பாதபூசையைச்செய்து இருபதுநாளும் இக்கதையை ஒருவழிப்பட்டமனமோடு கேட்டுச் சஷ்டிதிதியும் சதய நக்ஷத்திரமும் கூடியுள்ள இருபத்தோராவதுநாளில் அக்கன்னியர்கள் விநாயகப்பெருமானது திருக்கோவிலைத் திருமெழுக்கிட்டு, தீபமேற்றி, கரும்பு, கதலி, கமுகு, மஞ்சள், செந்நெல் இவைகளைத் திசைதோறும் நிரைத்து, பூம்பட்டால் மேற்கட்டி அலங்கரித்து நிறைகுடம்வைத்து ஐங்கரனுருவமைத்து உள்ளன்போடு இளநீர்க்குலை, வாழைக்குலை, தென்னம்பாளை, வாழைக்கனி, கவரி இவைகளை மாலையாகத்தூக்கி, விநாயகக்கடவுளைத் திருமஞ்சனமாட்டிப் பல நிறப்பட்டுகள் புனைந்து திருநுதலிற் பொற்பட்டமும் இந்திர விற்போலவிளங்கும் மணியாரமும், வாகுவலயமும் காந்தி வீசும் முத்துமாலையும், ஒலிக்கின்ற சதங்கையு முதலாகவுள்ள ஆபரணங்கள் அணிந்து சந்தனம், குங்குமம், பனிநீர் அணிந்து, செருந்தி செண்பகம் செங்கழுநீர் குருந்து மல்லிகை கோங்கு ஆத்தி பாதிரி மந்தாரம் குருக்கத்தி கடம்பு சிறுநாழல் மகிழ் நெய்தல் கருங்குவளை மாதுளை வெட்சி கொன்றை குரா நாரத்தை அலரி நந்தியாவர்த்தம் கரந்தை கமலம் வெட்டிவேர் செவ்வந்தி பிச்சி சிறுசண்பகம் முல்லை செவ்வல்லி இருவாட்சி தும்பை அறுகு துளசி பூளை சீந்தில் ஊமத்தம் எருக்கு காந்தள் கூதாளம் காக்கணம் அடம்பு மாந்தளிர் வில்வம்ஆகிய இவற்றோடு புனுகு கஸ்தூரி முதலியனவும் சாத்தி, நெற்பொரியும் சர்க்கரையும் கரும்பும் தேங்காயும் செவ்விளநீரும் பலகிழங்கும் மாங்கனியும் பலாக்கனியும் வாழைக்கனியும் எட்பொரியும் தினைமாவும் அப்பமும் அவலும் ஆலங்காயும் வெற்றிலைபாக்கு கற்பூரம் முதலிய பலவற்றையும் விருப்புடன் வைத்துப் பலவாத்தியங்கள் முழங்க, திருவிளக்குகள் இரவையும் பகலெனறு சொல்லும்படி இருளை நீக்கிப்பிரகாசிக்க ஐங்கரக்கடவுளைக் களிப்புறச்செய்து அவரது திருப்புகழை விருப்புடன் கேட்பாராயினர்.

சப்தகன்னியர்கள் இவ்வாறு கேட்பதைக்கண்டு, பாம்பின் உருவத்தையுடைய மால் கச்சை வருத்தும் கொங்கையீர்! நானும் இந்நோன்பியற்றல் வேண்டும் என்று காப்பணிந்து கனிவகைகள் வேண்டுவன அளித்து இக்கதையை அன்புடன்கேட்டனன். பின் தெய்வமங்கையர் நோன்புமுடித்து நினைத்தவைகைவரப்பெற்றுத்தேவலோகமெய்தினர்.

உமையின் சாபத்தால் பாம்பு வடிவமான விஷ்ணுவும் பாம்புவடிவம் நீங்கிப்பழையவடிவம் பெற்றுத், தேவநாயகன் மங்கையோடிருந்தஉஞ் சைநகர்போய் உமையின்பாதங்களில் வணங்க, உமை கொடுங்கோபம் கொண்டவளாய்ச் சிவபெருமானை நோக்கி நானிடுஞ்சாபம் நீக்கினவர் யாவர் எனக்கூறி, மனையின் கதவையடைக்க, இறைவன் இதன் காரணத்தை மாலிடம் வினவ, அவன் தேவரீருடைய புதல்வனைக்குறித்து இயற்றியதவத்தின்பயன் இதுவென, மனமகிழ்ந்து மணிமிடற்றோனும் உமையாள் அடைத்த கதவின்தாள் நீங்கும்படி யாமும்இக்கதையைக் கேட்போமெனத் திருவுளங்கொண்டு மால் கதைசொல்ல அதை அன்புடன்கேட்டனர். கேட்டுமுடிதலும்உமையடைத்தகதவின்தாள் நீங்கிற்று. அரன் உமையை நகைசெய்ய, உமை நான்வரத் தேவரீர் நகைசெய்தமை எதன்பொருட்டு? அக்காரணத்தை யுரைத்தருளவேண்டுமென்று தம் நாயகராகிய பரமசிவனைக்கேட்க, அதற்குப் பரமசிவன் மங்காய்! உன்மகனுடைய நோன்பின் உறுதியை யறிந்து மனத்துள் மகிழ்ச்சிகொண்டு சிரித்தேன் என்றனர். உமையாள் ஆதியந்தரகிதராகிய பரமசிவனுரை வணங்கித் தேவசேனாதிபதியும் பரதேசம்போயிருக்கின்றவனுமாகிய கந்தன் இவ்விடத்திற்கு வருதற்பொருட்டாகத் தமியளும் நோற்பேன் எனக்கூற, சிவபெருமானும் அவ்வாறே விடைகொடுத்தனர். உமையம்மை தனது நாயகர் கதை சொல்லத் தான் கதைகேட்டு நோற்றனள். நோற்கவே, சரவணபவனும் குறவர்குடியில் வளர்ந்த வள்ளிநாயகியை மணஞ்செய்து தனது பிதாமாதாக்களாகிய பரமசிவனையும் பார்வதியையும் அடைந்து திருவடிகளில் நமஸ்கரித்து வணங்கினர்.

அன்றியும், இக்கதையை வாசனைகமழும் மலர்மாலை யணிந்த விக்கிரமார்க்கனும்அவன்மனைவியும் அன்புடன்கேட்டு நோன்புசெய்து அந்நோன்பினுடைய பயனைத் தாங்கள் விரும்பிய தமது இராஜ்ஜியத்தை அடைந்தார்கள். அதன்பின்பு, அந்த விக்கிரமார்க்கமகாராஜனுடைய மனைவிமார்களுள் பிறைபோலும் அழகிய புருவமுள்ள இலக்கணசுந்தரியென்பாள் பிள்ளையார்நோன்பு அநுட்டிக்க ஆரம்பித்துத் தன்னுடையகையில் காப்பு அணிந்து சிலநாள் நோன்பு அநுட்டித்துப் பின்பு நோன்பை அநுட்டிக்காமல் இடையில் நழுவவிட்டு வெறுப்புள்ளவளாகித் தனது கையிலணிந்திருந்த இழையையும் பட்டுப்போன ஒரு கொவ்வைக் கொடியின்மேல் எறிந்துவிட்டனள். அரசியினால் அவிழ்த்தெறியப்பட்ட இழையானது பட்டகொவ்வையின்மேல் பொருந்தியதும் யானைமுகக்கடவுளின் அநுக்கிரகத்தினால் அக்கொவ்வைக் கொடி தளிர்செறிந்து இலைமலிந்து பூநிறைந்து காய்கனத்துப் பொலிந்து செழிப்புள்ளதாய் நின்றது.

இவ்வாறாகக் கொவ்வையானது துளிர் பூக்களோடு நிறைந்திருப்பதைப்பார்த்து வேப்பஞ்சேரியில் இருப்பவள் ஒருத்தி அக்கொவ்

வையினிலைகளைப்பறிக்கும்போது இலக்கணசுந்தரிபோட்ட இழை அதி ந்கிடப்பதைப்பார்த்து அதனையெடுத்து அவ்விலக்கணசுந்தரியினிடம் காட்டினள். இலக்கணசுந்தரி அவளுக்குஆனைமுகக்கடவுளை வழிபாடு செய்து சஷ்டிநோன்பு அநுஷ்டியென்றாள். அவளும் அதற்கிசைந்து ஆனைமாமுகத்து அருட்பெருந்தகைக்கடவுளை அப்பமுதலியவை வைத் து நிவேதனஞ்செய்து பலவகையான புதுமலர்கள்கொண்டு அருச்சனை புரிந்து நோற்றாள். விநாயகமூர்த்தி அவளுடைய நோன்பிற்கு மன மகிழ்ந்து அளவற்ற பாக்கியமருள அவைகளைக்கொண்டுபோய் விக்கிர மார்க்கனுடைய மாளிகையில் வைத்தாள்.

பிறகு விக்கிரமார்க்கனெனு மரசன் நித்திரைசெய்கையில் வி நாயகப்பெருமான் பயந்தரும்படியான உடையுடுத்து மணிகட்டித்திரு வடிகளில் தண்டையுஞ் சதங்கையும் ஒலிக்க, அவ்வரசனுடையகனவி ற்போய் "பகையரசர்களாகிய யானைகளுக்குச்சிங்கவேறுபோன்றோய்! உன்மனையாள் இலக்கணசுந்தரி இந்தமாளிகையிலிருப்பாளேல், உன் னுடைய சம்பத்துக்கள் நாசமடைவதோடு பலவிததுன்பமும் உன்னை வந்துசாரும்; ஆதலின் நீ அவளை மனையினின்றும்அகற்றிவிடுக" என் றருளினர். விக்கிரமார்க்கன் திடீரென விழித்துக்கனவில்நிகழ்ந்ததை வெளியிடுமளவில் ஆனைகளும் குதிரைகளும்கூட்டம்கூட்டமாய் இறந் ததோடு நகரும் கேடுற்றது. அதுகண்டு அரசன் இலக்கணசுந்தரியை த்தன் மாளிகையிலிருந்து வேறு இடத்துக்குப்போவெனத் துரத்திவி ட்டான். இலக்கணசுந்தரி தன்னுடைய நாயகனால் துரத்தப்பட்டு ஒரு வணிகன் மனையிற்புகுந்திருக்க அம்மனையிலுள்ள மணிகளும்முத் துக்களும் கல்லுகளாய் மாறிவிட்டன. அதனையறிந்த வணிகன் தன் னுடைய வீட்டினின்றும் இலக்கண சுந்தரியை வெளிப்படுத்தினன். வெளிக்கிளம்பி மனநொந்து பின் ஒரு குயவன் வீட்டிற்போய் இருந் தாள். அக்குயவன் வீட்டில்உள்ள மட்பாண்டங்கள் உடைந்து கள் வரால் கொள்ளைகொண்டும் போகப்பட்டன. இந்த இலக்கணசுந்தரி என் வீட்டையடைந்ததனால் இது நேர்ந்ததுஎனவெண்ணி அக்குயவ னும் தன் கிரகத்தினின்றும் அகற்றிவிட்டான். குயவன் மனையினி ன்று நீக்கப்பட்ட கோதைநல்லாள் மேலும் ஏக்கங்கொண்டாளாய் வண்ணான்வீட்டிற்போயிருக்க, அவ்வண்ணான்வீட்டிலுள்ள ஆடைகள் யாவும்கிழிந்து துண்டுதுண்டாய்விட்டன. உடனே அவ்வண்ணானும் தன்னில்லத்தைவிட்டுவிலக்க, அவ்விலக்கணசுந்தரி ஐயோ எனப்புல ம்பி, மாலைக்காரன் கிரகத்திற் சென்று இருக்க, அம்மாலைக்காரன் வீட்டு மாலைகள் எல்லாம் பாம்புகளாய் ஆயின. அதனைநோக்கிய மா லைக்காரனும் அப்பாற்போவென அவளை அகற்றினன். மேகம் போலும் கருமையாகிய கூந்தலையுடைய அந்நங்கை வாட்டமடைந்து உழவன் மனையைக்கிட்டி அங்கிருக்க, அவ்வுழவனுடைய பயிர்கள் அழிந்து பலவித வளங்களும் குறைந்துவிட, அதைப்பார்த்த உழவன் அவளை வெளியிலகற்றிவிட்டான். அப்பால் அவ்விலக்கணசுந்தரி அவ்வையின்

வீட்டிற்போயிருந்தாள். அவள் அவ்வையின் வீட்டுக்கு வந்தது முதல் அவ்வை செல்லும் வீடுகள் தோறும் அவ்வையை வைது அடித்துப் பிடித்துத்தள்ளிக் கையினாற் குத்திக் கள்ளியென்று சொல்லி இகழ, ஔவை துக்கசாகரத்தில் முழுகியவளாய் எனக்குண்டாகிய இத்துன்பம் இலக்கணசுந்தரி என்வீட்டுக்கு வந்தமையால் நேரிட்டது எனவுணர்ந்தனள். இவ்வாறு உணர்ந்து ஔவை சாணகமெடுத்துவரும்படி இலக்கணசுந்தரியினிடம் சொல்ல, அவள் போய்ச் சாணகத்தையெடுக்கவும் அது புழுவாகித் தண்ணீர்வற்றி முழுதும் பெரும்புழுக்களாயின. ஔவை இப்படியானமையை யுணர்ந்து தானே சென்று சாணகமெடுத்துவந்து தரையை மெழுகி இலக்கண சுந்தரியைப் புத்தகமெடுத்து வரும்படி கட்டளையிட அவளும் அவ்வாறுபோய் எடுத்தாள். அது பாம்பாய் நின்று படம்விரித்து ஆடிற்று. இலக்கணசுந்தரி உடல்பதைத்து நடுநடுங்கி ஏங்கிக் கீழேவிழுந்து வருந்த, ஔவை அவளுக்குப் பயம் நீங்கும்படி செய்து தானே சென்று புததகமெடுத்துப் பார்த்துத்தவ நெறியிற் பிழைத்த தையலே! நீ சிவபிரானுக்கு மூத்த பிள்ளையாகிய விநாயகக்கடவுளுடையநோன்பை நன்கு இயற்றுக எனச்சொன்னாள்.

இயலிசை நாடகமெனும் முத்தமிழ்க்கடல் முழுதுமுணர்ந்த மூதறிவாட்டியார் மொழிப்படி பாவை நல்லாள் அவற்பொரியும், வெற்றிலைபாக்கும் பிறபொருள்களும் படைத்து வழிபாடுசெய்து கையில் இருபத்தோரிழைகட்டி அவ்வை இருபத்தொருதினமும் கதை சொல்லத் தான் அதைக்கேட்டுத் தெளிந்தாள். இவ்வாறு பிள்ளையார் நோன்பு முடிந்தபின் அப்பிள்ளையார் திருவருளால் விக்கிரமார்க்கன் வேட்டைக்குப்போய்த் தண்ணீர்விடாய்கொண்டு தன் ஏவலாளை நீர் கொண்டுவர அனுப்பினான். இலக்கணசுந்தரியானவள் நீரைக் கரகம் நிறையமொண்டு தண்ணீர்க்குவந்த அரசனது ஏவலாளிடம் விருப்புடன் கொடுத்தாள். ஏவலாளன் கரகத்தில் நீரைக்கொண்டுபோய் அரசனிடம்கொடுக்க அரசன் தானும் தன்னுடைய சேனைகளும் யானை குதிரைமுதலியவைகளும் உண்டும் பின்னும் நீர் குறையாது பெருகியிருக்க, அதிசயித்து நீர் கொடுத்த மாதிடம் விரைந்துபோய் நீ யார் என அரசன் வினவ, மயில்போலும் சாயலாள் தன் பெயர் கூறாது நாணம்பெருக நின்றனள். அப்படிநிற்கவே, அவ்வன்ன நடையாளை அரசன் தன் மனையாள் எனவறிந்து அழகுவிளங்கும் தனது மணித்தேரில் ஏற்றி மனமகிழ்வுடன் தன்னூருக்குக் கொண்டுபோய் மனையாளும் தானும் அநேககாலம் இன்பமுடன் வாழ்ந்திருந்தனன்.

பிள்ளையார்நோன்புமான்மிய வசனம்

முற்றிற்று.



உ.

சிவமயம்.

## தனவைசியராகிய

### நாட்டுக்கோட்டை

# நகரத்தார் வரலாறு.

ஆதிகாலத்தில் நாகநாட்டில் சாந்தியாபுரி என்னும் நகரத்தில் சந்திரகுலகோத்திர வைசியர்கள் இரத் ன வியாபாரம் புரிபவர்களாய், மரகதவிநாயகர்பூசையும், கோபதீ ரசுவாமிதெரிசனமுஞ்செய்யும் நியமமுடையவர்களாய் வாழ்ந்துகொண்டிருந்து, கலியுகவருஷம் 204-ல், அந்நாட்டைவிட்டகன்று தொண்டைமண்டலத்திலுள்ள காஞ்சீபுரத்தையடைந்து அங்கு 2108-வருஷகாலம் வசித்துக்கொண்டிருந்தனர்.

அதன்பின்னர், இவ்வைசியர்கள் தொண்டைமண்டலத்தைவிட்டுக் கலியுகவருஷம் 2312-ல் சோழமண்டலத்தை யடைந்து காவிரிப்பூம்பட்டினத்தில் 1496-வருஷகாலம் வசித்திருந்தனர்.

அதன்பின்னர், இவ்வைசியர்கள் காவிரிப்பூம்பட்டினத்தையகன்று கலியுகவருஷம் 3808-ல் பாண்டியநாட்டை யடைந்து, அதுமுதல் அந்நாட்டிலே, கடலுக்கு மேற்கும், பிரான்மலைக்குக் கிழக்கும், வைகைக்கு வடக்கும், வெள்ளாற்றிற்குத்தெற்கும் ஆகிய நான்கு எல்லைக்குட்பட்ட இடத்தைத்தங்களுக்கு வாசஸ்தானமாய் ஏற்படுத்தி வாழ்ந்துவருகின்றனர்.



சௌந்தரபாண்டியராஜனால் நகரக்கோவில்கள்

நகரத்தாருக்கு விடப்பட்ட காலம்.

1. இளையாற்றக்குடிக்கோவில் கலியுகம் 3808-லும், 707
2. மாற்றூர்க்கோவில் ஷை 3813-லும், 712
3. வைரவன்பட்டிக்கோவில் ஷை 3813-லும், 712
4. இலுப்பைக்குடிக்கோவில் ஷை 3815-லும், 714
5. இரணியூர்க்கோவில் ஷை 3815-லும், 714
6. பிள்ளையார்பட்டிக்கோவில் ஷை 3815-லும், 714
7. நேமங்கோவில் ஷை 3815-லும், 714
8. சூரைக்குடிக்கோவில் ஷை 3819-லும், 718
9. வேலங்குடிக்கோவில் ஷை 3819-லும் விடப்பட்டன. 718